# பகவத் பாதை




Bagavath Path

இது ஒரு பகவத் மிஷன் வெளியீடு

பாதை - 1 2011 / நவம்பர் மலர் - 2

தனிச்சுற்றுக்கு மட்டும்




Sri Bagavath

*ஞானியரை வணங்குவது சிறப்பல்ல! நீங்களே ஞானியாய் மலர்வதுதான் சிறப்பு!!*

- ஸ்ரீபகவத்

# சரணாகதி

சரணாகதி தத்துவம் என்பது ஆன்மீக உலகில் மிகவும் சிறப்பித்துப் பேசப்படும் ஒரு தத்துவமாகும். பக்தி மார்க்கத்தின் உச்சநிலையாகக் கருதப்படுவது தான் சரணாகதி ஆகும்.

நம்பிக்கையை ஆதாரமாகக் கொண்டு செயல்படுவதுதான் சரணாகதி. ஏன் சரணாகதி அடையவேண்டும், எதற்காக சரணாகதி அடையவேண்டும், என்று நாம் கேள்வி கேட்க ஆரம்பித்தோமாயின் அங்கு நம்பிக்கை ஏற்பட வாய்ப்பில்லை. நம்பிக்கை உறுதி பெறாத நிலையில் சரணாகதி ஏற்படவும் வாய்ப்பு கிடையாது.

எந்தக் கேள்வியும் கேட்காமல் சரணடைந்தால் மட்டுமே சரணாகதி ஏற்பட சாத்தியம் உண்டு.

ஒருமுறை திருப்பூர் சென்றிருந்தபோது அரவிந்த அன்னையின் பக்தர்கள் சிலரிடம் உரையாட நேர்ந்தது. பெண் பக்தைகள் சிலர் தங்கள் கருத்தைக் கூறினர். "எங்களுக்கு தீய உணர்வுகள் எவையாவது ஏற்படும்போது, நாங்கள் அவற்றை அன்னையிடம் ஒப்படைத்து விடுவோம். அன்னை எங்களது தீய உணர்வுகளைச் சரிசெய்து விடுவார்கள்"

அப்போது அவர்களுடன் பேச நேர்ந்தது.

"நமக்கு வரக்கூடிய உணர்வுகள் நம்மிடத்தே ஏற்பட்டாலும், நாமாக அவற்றைக் கொண்டு வரவில்லை. அவை நம்மையறியாமல் ஏற்படுகின்றன. உண்மையில் மோசமான தீய உணர்வுகள் எவையும் நமக்கு ஏற்படக்கூடாது என்றுதான் நாம் திட்டமிட்டிருப்போம். ஆனால், நமது விருப்பத்தையும் மீறி நமக்குள் தீய உணர்வுகள் ஏற்பட்டுவிடும். நமக்குள் ஏற்படும் உணர்வுகளுக்கெல்லாம் நாமே பொறுப்பு என நாம் தவறாகப் புரிந்து கொள்கிறோம்...

"நாம் ஒரு சினிமாவில் நடிப்பதாக வைத்துக்கொள்வோம். டைரக்டர் நம்மிடம் கோபத்தை வெளிக்காட்டும் படியாகவோ அல்லது பயத்தைக்காட்டும் படியாகவோ நடிக்கச் சொல்லுகிறார். அப்போது நாம் நாமாக கோபத்தையோ, பயத்தையோ வெளிக்காட்டுகிறோம். ஆனால் நம்முடைய யதார்த்த வாழ்க்கையில், நாம் நமது உணர்வுகளை நாமாக முயன்று வெளிப்படுத்துவது இல்லை. நமது உணர்வுகள் அனைத்தும் நம்மையறியாமல் தாமாக வந்துவிடுகின்றன...

"ஆனால் நம்மையறியாமல் ஏற்பட்ட உணர்வுளை நாம், நாமாக ஏற்படுத்திய உணர்வுகளாக எடுத்துக் கொள்கிறோம். அதனால் அதனைச் சீரமைக்கும் பொறுப்பையும் நாம் எடுத்துக்கொள்கிறோம். அப்படி சீரமைக்கும் பொறுப்பை நாம் எடுத்துக்கொள்ளாவிட்டால் என்ன ஆகும் ?....

"ஒருமுறை அன்பர் ஒருவர் ஒரு பிரச்சனையைக்கூறி தீர்வு கேட்டார். 'எனக்கு சுலபமாகக் கோபம் ஏற்பட்டுவிடுகிறது. ஆனால் அதனைக் கட்டுப்படுத்துவதுதான் சிரமமாக உள்ளது. கோபப்படுவது சுலபமாக உள்ளது. கட்டுப்படுத்துவது கடினமாக உள்ளது. எப்படிக் கோபத்தைக் கட்டுக்குள் கொண்டுவருவது ?' இப்படி அவர் கேட்டார். அவரிடம் அதுபற்றி உரையாடினோம். "உங்களுக்கு சுலபமானது எது ? கடினமானது எது ? கோபப்படுவது சுலபமானது; கட்டுப்படுத்துவது கடினமானது. கடினமானதைச் செய்வது சிரமமான ஒன்று. ஆனால், சுலபமானதைச் செய்வது சுலபமான ஒன்று. நீங்கள் கடினமானதைச் செய்யவே வேண்டாம். சுலபமானதை மட்டும் செய்யுங்கள். கோபப்படுவது உங்களுக்குச் சுலபமானது என்று கூறினீர்கள். அதையே செய்யுங்கள். சுலபமான அந்தக் கோபத்துடன் காலையிலிருந்து மாலைவரை இருந்து காட்டுங்கள்'. அப்போதுதான் அவருக்குத் தெரிந்தது, நாம் எந்த உணர்வுகளையும் பிடித்துவைக்க முடியாது என்று.....

"உண்மையில் நமது உணர்வுகளின் ஆயுள் அரை விநாடி நேரம் மட்டுமே. அவை நல்ல உணர்வுகளானாலும் சரி, தீய உணர்வுகளானாலும் சரி அவற்றின் ஆயுள் அரைவிநாடியே. தாமாகத் தோன்றிய உணர்வுகள் அனைத்தும், தாமாகவே மறைந்து விடுகின்றன. அவற்றைச் சீரமைக்கும் பொறுப்பை எடுத்துக்கொள்வதன் மூலமாக மட்டுமே நாம் அந்த உணர்வுகளுக்கு உயிர்கொடுத்துப் புதுப்பித்து விடுகிறோம்...

"நமது உணர்வுகளை அன்னையிடம் ஒப்படைத்து, அன்னையை அந்த உணர்வைச் சீரமைக்கச் சொல்லுவதற்குப் பதிலாக நமக்கு ஏற்படும் உணர்வுகள் அனைத்தும் அன்னையின் அருளால் ஏற்படுபவையாக ஏன் நாம் எடுத்துக்கொள்ளக்கூடாது ? நமக்கு நற்சிந்தனைகளும், நல்ல உணர்வுகளும் ஏற்படும்போது, நாம் அவற்றை நமது அன்னை ஏற்படுத்தியதாக எண்ணிக்கொள்வது மிகவும் சுலபம். ஆனால் அருவருக்கத்தகுந்த ஆபாசமான ஓர் உணர்வு நமக்கு ஏற்படுவதாயின் நாம் அப்படி எண்ணமாட்டோம். அந்த உணர்வுகளை நாமே ஏற்படுத்திக் கொண்டுவிட்டதாக ஒரு குற்ற உணர்ச்சியை ஏற்படுத்திக் கொள்ளுவோம். உண்மையில் எந்த உணர்வுகளையும் நாம் ஏற்படுத்தவில்லை. நமது இயல்புக்கேற்ற உணர்வுகள் நம்மையறியாமல் தாமாக ஏற்படுகின்றன. தாமாக ஏற்பட்ட உணர்வுகள் தாமாகவே மறைந்துவிடும். அவற்றை நாம் அப்புறப்படுத்தத் தேவையில்லை....

"தாமாக வரும் உணர்வுகளை, நாம், நாமாக விரும்பி அங்கீகரித்து அதனைக் கைகளில் எடுத்துச் செயல்படுவோமாயின் அந்த உணர்வுகளால் ஏற்படும் பாதிப்புகள் நமக்கு ஏற்படுகின்றன. அப்படி அவற்றை நமது செயலுக்காக அங்கீகரித்து ஏற்றுக் கொள்ளாத பட்சத்தில், அவை அனைத்தும் உயிர் பெறாமல் அழிந்துபோய் விடுகின்றன. உங்களுக்குள் ஏற்படும் நல்ல உணர்வுகளும், தீய உணர்வுகளும் அன்னையே ஏற்படுத்தியதாக எண்ணிக் கொண்டாலும் ஒன்றுதான் அல்லது அவற்றைத் தாமாக ஏற்பட்டவையாக எடுத்துக்கொண்டாலும் ஒன்றுதான். மொத்தத்தில் அவற்றுக்கு நாம் பொறுப்பை எடுத்து, உரிமை கொண்டாடுவதில்லை. நாம் பொறுப்பை எடுத்துக்கொள்ளாத பட்சத்தில், தாமாக ஏற்பட்ட யாவையும், தாமாக மறைந்து விடுகின்றன; தாமாகத் தீர்வு பெற்று விடுகின்றன."

பொதுவாக புறத்தில் நிகழும் நிகழ்வுகள் அனைத்தையும் இறைவனே ஏற்படுத்தியவையாக எடுத்துக்கொள்வதுதான் சரணாகதி என்று கூறப்படுகிறது.

நமக்கு எவராவது கேடு விளைவித்துவிடலாம்; நமது பொருளை அபகரித்துச்சென்று விடலாம். இதனை இறைவன் ஏற்படுத்திய செயலாக; இறைவன் வழங்கிய பிரசாதமாக ஏற்றுக்கொள்வது தான் சரணாகதி என்று கூறப்படுகிறது.

இது தவறு. இது சரணாகதியே அல்ல. இது சரணாகதி தத்துவம் அல்ல; இதுதான் சோம்பல் தத்துவம். நடப்பவைகளைச் சீரமைக்க நாம் அனைவரும் கடமைப்பட்டவர்களாவோம். நமது செயல்களைத் திட்டமிட்டு முயற்சியுடன் செயலாற்ற நாம் அனைவரும் கடமைப்பட்டுள்ளோம். நல்ல செயல்களில் ஈடுபடவும், தீய செயல்களில் இருந்து விடுபடவும், நாம் கடமைப்பட்டுள்ளோம்.

கோவையைச் சார்ந்த வழக்கறிஞர் ஒருவர், தனது குழந்தைகளுடனும் மனைவியுடனும் விஷமருந்தி தற்கொலை செய்து கொண்ட செய்தி பத்திரிக்கையில் வந்திருந்தது. தற்கொலை செய்யவேண்டிய காரணத்தை எழுதிவைத்துவிட்டு இறந்து போயிருந்தார். தனது தற்கொலைக்குக் காரணம் கடன்தொல்லை தான் என எழுதி வைத்திருந்த அவர், அப்படிக் கடன் வாங்கியதற்கான விநோதமான காரணமொன்றையும் கூறியிருந்தார். "நான் கடன் வாங்கியதற்குக் காரணம், திருப்பதி வெங்கடாசலபதிதான்" என எழுதிவைத்திருந்தார்.

எனது கஷ்டத்துக்கு இறைவன் தான் காரணம் என அவர் ஒரு பேச்சுக்காக இதனைக் கூறியிருக்கவில்லை. இதனை ஒரு மரண வாக்குமூலமாகவே கொடுத்துவிட்டு, தன்னையும், தனது அன்புக் குழந்தைகளையும், மனைவியையும் அழித்துக் கொண்டுவிட்டார்.

புறச்செயல்களை இறைவன் செயலாக ஏற்றுக்கொள்ளும் மனோபாவந்தான் நமது பொருளாதார பிரச்சினைகளுக்கும், பின்தங்கிய நிலைக்கும் காரணமாகும். புறச் செயல்கள் அனைத்தும் நம்மோடு தொடர்புடையவை. அவற்றில் நமது பங்கு உண்டு. அவற்றில் நமக்குரிய பங்கை நாம் சரிவரச் செய்யாவிட்டால், நாம் நமது கடமைகளிலிருந்தும் பொறுப்புகளிலிருந்தும் தவறியவர்களாவோம்.

ஆனால் நமது அக உணர்வுகள் அப்படிப்பட்டவை அல்ல. அங்கே நாம் எந்தப் பொறுப்புக்களையும் எடுக்கத் தேவையில்லை. தேவையற்ற இடத்தில் பொறுப்பை எடுத்துக் கொள்வதனால்தான் நமது பிரச்சினைகள் அனைத்தும் சிக்கல் மிகுந்ததாகின்றன.

எங்கே பொறுப்பை எடுக்கவேண்டுமோ, அங்கே பொறுப்பில்லாமல் நடந்துகொண்டு, எங்கே பொறுப்பை எடுக்கக் கூடாதோ, அங்கே பொறுப்பை எடுத்துக்கொண்டு, குழப்பத்தினுள் அமிழ்ந்துவிடுகின்றோம்.

சரணாகதி என்பது அக உணர்வுகள் அனைத்தையும் இறைவன் கொடுத்தவையாக ஏற்றுக் கொள்வதே ஆகும். அதுதான் சரியான விளைவைக்கொடுக்கும். நமக்கு ஏற்படும் உணர்வுகளில் நல்லவை, கெட்டவை கிடையாது. உயர்ந்தவை தாழ்ந்தவை கிடையாது. அவற்றைச் சீரமைக்கவேண்டிய கடமை எதுவும் நமக்குக் கிடையாது.

கோவையைச் சேர்ந்த அம்மா ஒருவர் எனக்கு அறிமுகமாகி இருந்தார். அந்த அம்மா, அவருடைய முற்பிறவியில் இராமகிருஷ்ண பரமஹம்சருடைய நேரடி சிஷ்யையாக இருந்ததாக் கூறப்படுகிறது. அவருக்கு

அவரையறியாமலேயே பலவிதமான ஆன்மீக அனுபவங்கள் ஏற்படுவதுண்டு. அவர் இப்பிறவியில் தீவிரமான ஆத்ம சாதனைகள் எவற்றையும் செய்ததில்லை. ஆனாலும் அவருக்கு உயர்தரமான ஆன்மீக அனுபவங்கள் ஏற்பட்டுவந்தன.

அவர் ஒருமுறை தொலைபேசியில் பேசும்போது கூறினார். "எனக்கு ஒரு வித்தியாசமான அனுபவம் ஏற்பட்டுவருகிறது. அந்த அனுபவந்தான் அனுபவத்தின் சிகரம் என்று தோன்றுகின்றது. அந்த அனுபவம் ஏற்படும்போது என்னை நானே ஒரு தெய்வமாக எடுத்துக்கொள்ளத் தோன்றுகிறது. இது என்ன அய்யா ?" என்று கேட்டார்.

அந்நிலையில் அவருடன் உரையாடல் நிகழ்ந்தது.

"அம்மா உங்களுடைய இயல்பு வித்தியாசமானது. இது சராசரி மனித இயல்பு அல்ல. உங்கள் இயல்பு வித்தியாசமாக இருக்கும் காரணத்தினால்தான் இத்தகைய வித்தியாசமான அனுபவம் உங்களுக்கு ஏற்பட்டுள்ளது. சராசரி மனிதர்களுக்கு இத்தகைய அனுபவம் எதுவும் தாமாக ஏற்படாது. அவர்கள் ஏதாவது பயிற்சி முயற்சிகளை மேற்கொண்டால் மட்டுமே இத்தகைய அனுபவங்களை அடைய வாய்ப்புண்டு....

"அதே நேரம் உங்களுக்கு யார்மீதாவது பொறாமையோ, கோபமோ அல்லது உங்களுக்கு ஏதாவது அருவருப்பான உணர்வுகளோ ஏற்படுவதாக வைத்துக் கொண்டால், அந்தத் தெய்வீகமான உணர்வுக்கும், இந்தக் கீழ்த்தரமான உணர்வுகளுக்கும் எந்த வித்தியாசமும் கிடையாது. அனைத்து உணர்வுகளும் நமது முயற்சியில்லாமல் நம்மையறியாமல் ஏற்படுகின்றன....

"அப்படித் தாமாக ஏற்பட்ட உணர்வுகளில் நல்ல உணர்வுகளைப் பிடித்துவைத்துக்கொள்ள வேண்டிய உரிமையோ, மோசமான உணர்வுகளை அப்புறப்படுத்தவேண்டிய கடமையோ நமக்குக் கிடையாது. தாமாக ஏற்பட்ட அனைத்தையும் தாமாக மறைந்துவிட அனுமதிப்பதே சரியானது. "நல்ல உணர்வு" என்று அதனைத் தக்கவைத்துக்கொள்ள முயற்சிப்பதும், "மோசமான உணர்வு" என்று எதையாவது அப்புறப்படுத்த முயற்சிப்பதும் தவறானதாகும்.

உணர்வுகள் அனைத்தும், தங்கு தடையற்ற பிரவாகமாகச் செல்லுவதே நமது மனோ இயக்கத்தின் இயற்கை ஆகும். அது அப்படி இயற்கையாக இயங்க அனுமதிப்பதுதான் சரணாகதி தத்துவமாகும்.

மனோ அனுபவங்களில் உயர்நிலை அனுபவம், தாழ்நிலை அனுபவம் என்று எவையும் கிடையாது. அவை அனைத்தும் பிரவகித்துச் செல்ல வேண்டிய தற்காலிகமான அனுபவங்களாக மட்டுமே இருக்கவேண்டும். சரணாகதி தத்துவம் செயல்படும்போது மட்டுமே, நமது அனுபவங்கள் அனைத்தும் பிரவாகமாக மாறிவிடுகின்றன.

நமது மனோ அனுபவங்களைச் சீரமைக்கும் பொறுப்பைச் சுமக்காதிருப்பதுதான், உண்மையான சரணாகதி.

## பகவத் பாதையில் மலர்ந்த மலர்கள்
## குரு காட்டிய குரு

என் பெயர் ராஜசேகர். என் வயது 40. சிறுவயதிலிருந்தே ஆன்மீகத்தில் ஈடுபாடு உண்டு. ஆன்மீக நூல்கள் நிறைய படிப்பது வழக்கம். ஓஷோவின் புத்தகங்களை நிறையப் படித்திருக்கிறேன்.

6 வருடத்திற்கு முன்பு என் மதிப்பிற்குரிய மகான் பொள்ளாச்சியில் உள்ள குரு ஜோதி ஆஸ்ரமத்தில் இருக்கும் மகா ஞானி ஸ்ரீ துர்கா பிரசாத் சுவாமிகளை சந்தித்தேன். மிக எளிமையானவர், "நாராயணா..... நாராயணா..." என்று எப்போதும் இறை நாமத்தை உச்சரித்துக்கொண்டே இருப்பார். அவரது சாந்த சொரூபமும், தெய்வீக முகமும் மனதை அமைதிப்படுத்திவிடும்.

அவரைத் தேடிவரும் அன்பர்கள் அவரிடம் புறத்தேடல் மற்றும் தொழில் சம்பந்தமாகக் கேள்வி கேட்கும் போதெல்லாம், அவர் தன் இன்முகம் மாறாமல் தன் ஞான திருஷ்டியின் மூலம் நடப்பதையும் நடக்கப்போவதையும் கூறி ஆசி வழங்குவார். என் மனம் சலனப்படும்போதெல்லாம், அவரைச் சந்தித்து வணங்கி மன அமைதி பெறுவேன். அவர், முகம் பார்த்து அகம் சொல்லக் கூடியவர். பலமுறை என் நண்பர்களுடன் சென்று சந்தித்திருக்கிறேன். நான் அவரை சந்திக்கும் போதெல்லாம் "சுவாமி அக விடுதலையை கொடுக்கும் ஞானத்தை பெற வழி சொல்லுங்கள்" என்றுதான் கேட்டுவருவேன். தொழில் சம்பந்தமாகவோ புறத்தேடல் சம்பந்தமாகவோ வேறு எதையும் கேட்க தோன்றாது. அவரும் "உனக்கு கண்டிப்பாக கிடைக்கும், அதற்கு ஒரு ஞானி வருவார்" எனக் கூறி வந்தார்.

ஒரு சமயம் நான் அவரிடம் "சுவாமி எனக்கு ஓஷோவின் கருத்துக்களில் அதிக ஈடுபாடு உண்டு, எனவே எனக்கு ஞானத்தைத் தரக்கூடிய மகான் ஓஷோவாக இருப்பாரா ?" என கேட்டேன். அவர் 'இல்லை அவர் தற்போது வாழ்ந்து கொண்டிருப்பவர், ஒரு பெரியவர், மகா ஞானி, வெண்தாடியுடன், வெள்ளை ஆடை அணிந்திருப்பார் அவரை 5 வருடத்திற்குள் சந்திப்பீர்கள்' எனக் கூறி ஆசி வழங்கினார்.

அன்றுமுதல் எனக்கு ஞானத்தெளிவைத் தரக்கூடிய அந்த மகானையும் அவரை சந்திக்கும் நாளையும் ஆவலோடு எதிர்நோக்கி காத்திருந்தேன்.

சில மாதங்களுக்கு முன்பு "தியானத்தை விடு! ஞானத்தைத் பெறு!!" என்ற வித்தியாசமான தலைப்பைக் கொண்ட ஓர் ஆன்மீக புத்தகத்தைப் பார்க்க நேர்ந்தது. அந்தத் தலைப்பே அந்த புத்தகத்தை வாங்கி படிக்க தூண்டியது.

அப்புத்தகத்தில் இதுவரை யாரும் சொல்லிராத வகையில் ஞானத்தை எளிமையாக்கி புதிய கோணத்தில் சொல்லப்பட்டிருந்தது. அதே சமயத்தில் அதை மறுக்கமுடியாதபடி விளக்கப்பட்டிருந்தது.

ஒரிருமுறை படித்தவுடன் மனம் மிகவும் லேசானதுபோல் தோன்றியது. நமது குருநாதர் சொல்லிய அந்த பெரியவர், மகான் இந்நூலின் ஆசிரியர் ஸ்ரீபகவத் அவர்களாகத்தான் இருக்கவேண்டும் என்று என்

உள்ளுணர்வு உணர்வு சொல்லியது.

எனக்கு ஞானத்தெளிவைக் கொடுக்கக்கூடிய மகா ஞானியைக் கண்டுபிடித்துவிட்ட மகிழ்ச்சி ஏற்பட்டது.

அதை உறுதிப்படுத்துவதற்காக உடனடியாக பொள்ளாச்சி சென்று என் குருநாதரிடம் இது பற்றி கேட்டேன். அவர் அமைதியாக என்னை ஊடுருவி பார்த்தார், பிறகு "இவர்தான் உனக்கு ஞானத்தெளிவைக் கொடுக்கக்கூடிய குரு, அந்த பெரியவர் இவர்தான், அந்த மகான் இவர்தான்" என கூறி பிறகு தன் ஞான திருஷ்டியின் மூலம் "இவர் தற்போது ஒரு கோயிலின் தென்புறத்தில் அமைந்திருக்கும் இல்லத்தில் கிழக்கு பார்த்து வெள்ளை ஆடை அணிந்து அமர்ந்திருக்கிறார்" என்றும் மேலும் "நான் இப்போதே இங்கிருந்தே அவரை பார்த்துக்கொண்டு தான் இருக்கிறேன்" என்றும் கூறினார். நான் உடனடியாக மகான் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களை புத்தகத்தில் உள்ள தொலைபேசி எண் மூலம் தொடர்பு கொண்டு குருநாதர் சொன்ன குறிப்புகளை உறுதி செய்து கொண்டேன். ஸ்ரீ பகவத் ஐயா அவர்களும் தான் திருவண்ணாமலையில் இருப்பதாகவும், கோயிலின் தென்புறத்தில் அமைந்திருக்கும் வீட்டில் கிழக்கு பார்த்து அமர்ந்திருப்பதாகவும் கூறினார். எனக்கு இந்நிகழ்ச்சி மகிழ்ச்சியையும் ஆச்சரியத்தையும் கொடுத்தது.

அதன் பிறகு ஸ்ரீ பகவத் ஐயா அவர்களைச் சந்திக்க திருவண்ணாமலைக்கு மிக ஆவலுடன் சென்றேன்.

அவர் வீட்டு முகவரியைத் தேடி வீட்டின் அருகே செல்லும் போது அவர் மாடியிலிருந்து கையசைத்து அழைத்தக் காட்சி ஞானத்தைத் தரும் தெய்வமே என்னை அழைத்து ஆட்கொண்டது போல் உள் உணர்வு தோன்றியது. அவரோடு உரையாடி திரும்பும்போது . மனம் தெளிவையும் அமைதியையும் பெற்றிருந்தது. "God is gift of Guru, Guru is gift of God" என்று சொல்லுவார்கள். அதை என் வாழ்க்கையில் அனுபவமாக உணர்ந்தேன்.

நன்றியுடன்
**K. Rajasekar** (Sasi Jewellry உரிமையாளர்)
Joint Secretary Jewelry Association, Udumalpet.
Ph : 99428-45527

## அய்யாவுடைய நிகழ்ச்சி

| | | | | |
|---|---|---|---|---|
| 22-10-2011 | முதல் | 11-11-2011 | வரை | - திருவண்ணாமலை |
| 12-11-2011 | முதல் | 14-11-2011 | வரை | - சென்னை |
| 15-11-2011 | முதல் | 25-11-2011 | வரை | - திருச்செந்தூர் |
| 26-11-2011 | முதல் | 28-11-2011 | வரை | - சென்னை |
| 29-11-2011 | முதல் | 10-01-2012 | வரை | - திருவண்ணாமலை |

## ஆசிரியர் பகுதி

பகவத் பாதையில் பயணம் மேற்கொள்ளத் துவங்கிய உங்களை, சக பயணியாக வரவேற்கிறேன்.

உங்களிடமிருந்து வந்த தொலைபேசி அழைப்புக்கள் இன்னும் நமது காதுகளில் இனிமையாக ஒலித்துக் கொண்டிருக்கின்றன.

உங்களுடைய பத்திரிக்கையாகக் கருதி நீங்கள் கூறிய ஆலோசனைகளும், திருத்தங்களும், பாராட்டுக்களும் மிகவும் உதவிகரமாக உள்ளன.

சந்தாவாகவும், நன்கொடையாகவும் அனுப்பி, பங்கு எடுத்துக்கொண்ட அனைவருக்கும் நன்றி.

ஆசிரியரின் முந்தைய மடல் வரவேற்பு மடலாக அமைந்திருந்த நிலையில், இந்த மடல் நன்றியறிவிப்பு மடலாக அமைந்துள்ளது.

ஆயினும் சில செய்திகள் :

ஈரோட்டிலிருக்கும் 'Hormony' எனும் வாழ்வியல் – ஆன்மீக அமைப்பின் நான்காவது ஆண்டுத் துவக்கவிழா 23-9-2011 அன்று நடைபெற்றது. 'ஞானமடைதல் எவ்வாறு சுலபமானது' என்ற தலைப்பில் அய்யா சிறப்புரையாற்றினார். நிகழ்ச்சிகளை டாக்டர் திரு. கோவிந்தசாமி ஏற்பாடு செய்திருந்தார்.

தொடர்ந்து 25-9-2011 மாலையில் சென்னை, மைலாப்பூர் பைன் ஆர்ட்ஸ் கிளப்பில் அய்யா, 'கவலைகள், டென்சன்கள் அனைத்திற்கும் தீர்வு' என்ற தலைப்பில் சிறப்புரையாற்றினார்.

நிகழ்ச்சியை முகலிவாக்கம் அமிர்தம் A.B.N. செல்வராஜ் ஏற்பாடு செய்திருந்தார்.

அந்த மேடையில் அந்த நிகழ்வின்போது பகவத் பாதை இதழ் வெளியீட்டு விழாவும் நடைபெற்றது.



முதற்பிரதிகளை உலக சமுதாய சேவாசங்க மனவளக்கலை பேராசிரியர் K.சங்கரன் அவர்கள் வெளியிட, A.B.N.செல்வராஜ் சென்னை அவர்கள் பெற்றுக்கொண்டார்.

வணக்கம். மீண்டும் சந்திப்போம்.
-ஆசிரியர்




## ?கேள்வி பதில்¿

**விடுதலை அடைந்த நிலையில் உள்ளவர்களுக்கு ஏற்படும் மனப்பாதிப்புகள் அவர்களை விட்டுபோய்விடுமா ?**

அவர்கள் திரவ நிலையிலிருப்பதால், அனைத்து அனுபவங்களும் விரைவாக மாறிவிடத்தான் செய்யும். காலப்போக்கில் சுத்திகரிப்பு இயக்கமும் சேர்ந்து நடந்து கொண்டிருக்கிறது. நம்முடைய இயல்புங்கூட அந்நிலையில் சுத்திகரித்துகொண்டுதான் இருக்கிறது. நம்முடைய கோபப்படும் இயல்பு, பயப்படும் இயல்பு ஆகியவைகூட மாறி அமைந்து கொண்டே இருக்கிறது. நம்முடைய இயல்புதான் அனுபவமாக மாறுகிறது; அனுபவங்கள்தாம் இயல்புகளாக மாறுகிறது. அது ஒரு சுழற்சியாக நடந்து கொண்டிருக்கிறது. ஒன்றில் ஏற்பட்ட மாறுதல் அடுத்தவற்றுக்கும் சென்றடைகிறது. இயல்பே மாறி அமையும் நிலையில் எல்லாவற்றையும் சுலபமாக எடுத்துக்கொள்ளும் தன்மை வந்துவிடுகிறது. தஞ்சாவூர் பொம்மையை, நாம் எப்படி சரித்துப்போட்டாலும், அது சமநிலைக்கு வந்துவிடும், நமது மனதை, எதிர்த்து போராடாமல் அதுபோக்கில் செயல்படவிடும்போது அது தானாகவே ஒரு சமன்பாட்டை அடைந்துவிடுகிறது.

## ஜென் கதை

ஒரு இளைஞன் சிறந்த வாள் பயிற்சி பெறுவதற்காக குருவைத்தேடிப் புறப்பட்டான். வல்லமை வாய்ந்த குரு ஒருவர் மலைமீது இருப்பதாகச் சொன்னார்கள். இளைஞன் ஆவலோடு மலையேறிச் சென்று குருவைக் கண்டான். வணங்கினான். தன் வேண்டுகோளைத் தெரிவித்தான்.

"குருவே, நான் கடினமாக உழைத்து, தீவிரமாகப்பயிற்சி எடுத்தால் எவ்வளவு காலத்தில் வல்லமை பெறமுடியும் ?" என்று கேட்டான்.

"பத்து ஆண்டுகள் பிடிக்கும்" என்றார் ஆசான்.

"என் தந்தை தள்ளாத வயதில் இருக்கிறார். நான் அவ்வளவு காலம் இங்கே தங்கியிருக்க முடியாது. நான் சீக்கிரம் ஊர் திரும்பி அவரைக் கவனிக்கவேண்டும். மிகக்கடுமையாகப்பயிற்சி எடுத்தால் எவ்வளவு சீக்கிரம் முடிக்க முடியும் ?" என்று கேட்டான் இளைஞன்.

"அநேகமாக முப்பது ஆண்டுகள் பிடிக்கலாம்" என்றார் அவர்.

"என்ன இப்படிச் சொல்கிறீர்கள் ? முதலில் பத்து ஆண்டுகள் என்றுதானே சொன்னீர்கள், கடுமையாகப்பயிற்சி எடுத்தால் சீக்கிரம் முடிக்க முடியும் அல்லவா ?" என்றான் அவன்.

"அப்படியா ? அப்படிச் சீக்கீரம் கற்க வேண்டுமானால் சுமார் எழுபது வருடங்கள் என்கூட நீ இருக்க வேண்டி வரும்", என்றார் குரு.

"அவசரத்தில் கைவிட்டால் அண்டாவில் கூட கை நுழையாது" என்பது பழமொழி.





31, இராமலிங்கசாமி தெரு, அம்மாபேட்டை, சேலம் - 636 003. தமிழ்நாடு, இந்தியா. தொடர்புக்கு : 97891 65555, 99942 05880.

## ஆசையின் ரகசியம்

புத்தரின் போதனை "ஆசையே துன்பத்திற்கு காரணம்" இது நம் அனைவருக்கும் தெரிந்ததே. புத்தர் கடுமையான பயிற்சிக்கும், முயற்சிக்கும் பிறகு இதைக் கண்டுபிடித்தார். புத்தரின் போதனையில் அவருடன் இருந்த சீடர்கள் பலரும் ஞானத்தெளிவு பெற்றிருந்தனர். தற்போது இப்போதனையினால் ஆசையையும் துறக்கமுடியவில்லை, துன்பத்தையும் போக்க முடியவில்லையே ஏன்?

ஏனெனில் "ஆசையே துன்பத்திற்கு காரணம்" என்பது ஒரு மேலோட்டமான செய்தியே. புத்தர் சொல்ல வந்த செய்தி இது அல்ல.

இப்போதனையில் பொதிந்திருக்கும் ஆழ்ந்த உண்மையை விளக்குகிறார் ஸ்ரீ பகவத் அவர்கள். அடுத்த இதழில் வெளிவர இருக்கும் "ஆசை" என்ற கட்டுரையில் அந்த ஞான ரகசியத்தை மிக எளிமையாக்கி கொடுக்க இருக்கிறார். இது அனைவருக்கும் தெளிவை கொடுக்கும் என்பது உறுதி.

-ஆசிரியர்.

### குறிப்புகள்

கேள்வி பதில் பகுதிக்காக வாசகர்களிடமிருந்து கேள்விகளை வரவேற்கிறோம்.

நீங்கள் இம்மாத இதழை மாதந்தோறும் உங்களின் email மூலம் பெறுவதற்க்கு உங்கள் email ID, தொலைப்பேசி எண், அலைப்பேசி எண் மற்றும் வீட்டு முகவரியையும் பதிவு செய்வது அவசியம்.
bagavathpathmonthlymagazine@gmail.com

**நமது இதழைப் படிக்கத் தகுதியான அன்பர்களின் முகவரிகளை அனுப்பி வையுங்கள்**

## ஸ்ரீபகவத் அவர்களின் நூல்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | நீங்களும் ஞானியாகலாம் | – ரூ. | 40 |
| 2. | கவலைகள் அனைத்திற்கும் தீர்வு | – ரூ. | 100 |
| 3. | ஞானமலர்வு | – ரூ. | 15 |
| 4. | தியானத்தை விடு ! ஞானத்தைப் பெறு ! (நர்மதா) | – ரூ. | 90 |
| 5. | சும்மா இரு | – ரூ. | 30 |
| 6. | நான் யார் ? | – ரூ. | 20 |
| 7. | சூனியப் பிரவாஹம் (நர்மதா) | – ரூ. | 65 |
| 8. | ஞானப் பட்டறை | – ரூ. | 60 |
| 9. | ஆன்மாவைத் துறந்து ஆன்மாவாக இரு | – ரூ. | 60 |
| 10. | தேடிப்போக வீடு இல்லை | – ரூ. | 30 |
| 11. | ஸ்ரீ பகவத் பார்வையில் ஜென் கதைகள் | – ரூ. | 40 |
| 12. | சத் தரிசனம் | – ரூ. | 60 |
| 13. | ஆகாமிய கர்மா | – ரூ. | 60 |
| 14. | ஞான விடுதலை | – ரூ. | 50 |
| 15. | ஆன்ம ஞான ரகசியம் | – ரூ. | 50 |
| 6. | அனுஷ்டான ஆன்மீகம் | – ரூ. | 150 |

English Books

| | | | |
|---|---|---|---|
| 1. | Don't Delay Enlightenment | – ரூ. | 100 |
| 2. | Give up Meditation ! Get Enlightenment ! | – ரூ. | 300 |
| 3. | Renounce God ! Be God ! | – ரூ. | 200 |
| 4. | Absolute Reality | – ரூ. | 150 |

**All English Books are Available in Higgin Bothams Book Stores**

Audio Books

| | | | |
|---|---|---|---|
| 1. | ஞான விடுதலை | – ரூ. | 150 |
| 2. | நீங்களும் ஞானியாகலாம் | – ரூ. | 100 |
| 3. | Don't Delay Enlightenment | – ரூ. | 150 |
| 4. | ஞான மலர்வு – ஐயா உரை (Audio) | – ரூ. | 100 |
| 5. | கர்ம வினைகளுக்கு அறிவியல் ரீதியான பரிகாரங்கள் – ஐயா உரை (Video) | – ரூ. | 100 |

நூல்களை பெற:

**ப்ரவாகம் பப்ளிகேஷன்ஸ்**

31, இராமலிங்கசாமி தெரு, அம்மாபேட்டை, சேலம் - 636 003. தமிழ்நாடு, இந்தியா.
தொடர்புக்கு : 97891 65555, 99942 05880.

**Book packet** containing printed books

To




*If undelivered please return to:*
**SRI BAGAVATH MISSION**
31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.
Mobile: 98943 77433,99421 81933.
www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : jeevamani@pravaagam.org

Published by Shri. A.R.Ravishankar on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem - 636 003. Tamilnadu,INDIA.
Printed by Jayavel Press, Gandhi maidhanam, Ammapet, Salem - 636 003. Editor : Shri. A.Senthilnadhan, cell : 99421 81933.